சுவடிகள் பாதுகாப்பு மய்யம் அரியநூல்

தமிழ்த் தாய் 67 - வெளியீடு

சிவப்பிரகாசசுவாமிகள் இயற்றிய

# நன்னெறி

பதவுரை




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

International Institute of Tamil Studies



"அறிவுச் செல்வங்கள் அனைத்தையும்
தமிழுக்குக் கொண்டுவர வேண்டும்.
இனிவரும் நூற்றாண்டுகளுக்கும்
அருந்தமிழை ஆற்றல் படுத்த வேண்டும்"

- மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர்
புரட்சித் தலைவி
**அம்மா** அவர்கள்

சிவப்பிரகாசசுவாமிகள்

இயற்றிய

# நன்னெறி

## பதவுரை

சுவடிகள் பாதுகாப்பு மய்யம் அரியநூல்
தமிழ்த் தாய் 67 - வெளியீடு


பதிப்பாசிரியர்

முனைவர் **கோ.விசயராகவன்**

எம்.ஏ.,எம்.ஃபில்.,எம்பி.ஏ.,பி.எட்.,பிஎச்.டி

இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.





**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

இரண்டாம் முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்

தரமணி, சென்னை - 600 113

# நூல் விவரக் குறிப்பு


| | |
|---|---|
| நூல் தலைப்பு | : நன்னெறி |
| நூல் ஆசிரியர் | : சிவப்பிரகாசசுவாமிகள் |
| வெளியீட்டாளரும் பதிப்புரிமையும் | : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்<br>தரமணி, சென்னை - 600 113. |
| தொலைபேசி எண் | : 044 - 22542992 |
| வெளியீட்டு எண் | : 841 |
| மொழி | : தமிழ் |
| பதிப்பு ஆண்டு | : 2015 : முதற்பதிப்பு : |
| பயன்படுத்திய தாள் | : 16 கிகி டி.என்.பி.எல்.வெள்ளை |
| நூலின் அளவு | : 1/8 டெம்மி |
| எழுத்தின் அளவு | : 11 புள்ளி |
| பக்க எண்ணிக்கை | : 56 |
| அச்சுப்படிகளின் எண்ணிக்கை | : 1200 |
| விலை | : ரூ.20 (ரூபாய் இருபது மட்டும்) |
| ISBN | : 978-93-85165-52-8 |
| அச்சகம் | : ராஜ் எண்டர்பிரைஸஸ்<br>திருவல்லிக்கேணி<br>சென்னை - 600 005. |

முனைவர் **கோ.விசயராகவன்** எம்.ஏ., எம்.ஃபில்.,எம்.பி.ஏ.,பி.எட்.,பிஎச்.டி.
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600 113

# அணிந்துரை

*பழங்கால அரியநூல்களையும் சுவடிகளையும் பாதுகாக்கும் வகையில் 2014ஆம் ஆண்டு நிறுவனத்தில் 34* ***இலட்சம் மதிப்பீட்டில் சுவடிகள் பாதுகாப்பு மய்யம் மாண்புமிகு மக்கள் முதல்வர் புரட்சித்தலைவி அம்மா அவர்களால் தொடங்கப்பட்டது.*** *அவ்வகையில் நாடெங்கினும் உள்ள அரிய நூல்களை, சுவடிகளைத் திரட்டும் பணி தொடங்கப்பட்டு, கண்டறியப்பட்டுள்ள நூல்களைத் தமிழ்த்தாய் 67 - பெருவிழா, பிப்ரவரி 2015இல் வெளியிடும் திட்டத்தின் கீழ், 1871 ஆம் ஆண்டு வெளிவந்துள்ள இந்நூல் இப்பொழுது மீட்டுருவாக்கம் செய்யப்பெற்று வெளியிடப்படுகிறது.*

*இலக்கிய இலக்கண வளமுடைய தமிழ்மொழியில் மக்கள் வாழ்வாங்கு வாழ வகைசெய்யும் அறநூற் களஞ்சியங்களுக்கும் குறைவில்லை. தனித்தே அறமுரைக்கும் திருக்குறள் முதற்கொண்டு பற்பல நூல்கள் தோன்றியுள்ளன. அவ்வகையில் முற்காலத்தில் தோன்றிய அறநூல்களுள் ஒன்றுதான் நன்னெறி என்னும் இந்நூல். இது 40 வெண்பாக்களை உடையது என்பதை நன்னெறி வெண்பா நாற்பதும் வருமே என்னும் கடவுள் வாழ்த்துப் பாடலால் அறியலாம். வாழ்வாங்கு வாழவகை செய்யும் நன்னெறிகளைத் தொகுத்துரைக்கின்றது.*

*இந்நூலை எழுதியவர் காஞ்சியில் தோன்றி நெல்லையில் தாமிரபரணிக்கருகில் சிந்துபூந்துறையில் வாழ்ந்து நிறைந்த* ***சிவப்பிரகாச தேசிகர்.*** *இளமையிலேயே சைவப்பற்றும் சாத்திர வித்தகமும் மிகப்பெற்றுச் சிறந்த துறவினர்.*

வெள்ளியம்பலத் தம்பிரானிடம் பாடங்கேட்ட பண்பினர். பிரபுலிங்கலீலை, சிவப்பிரகாசவிகாசம், சோண சைலமாலை, வெங்கைக் கலம்பகம், வெங்கைக் கோவை, வெங்கை உலா, நால்வர் நான்மணி மாலை, வேதாந்த சூடாமணி, சிவநாம மகிமை என்னும் பல பிற நூல்களையும் வழங்கியுள்ளார். தமது 32 ஆம் வயதில் முக்தியடைந்த பெருமகனார். அவருடைய நன்னெறி பதவுரையுடன் 1871 இல் வெளியிடப்பட்டுள்ளது. அவ்வரிய நூல் பல்லாண்டு களுக்குப் பிறகு புத்துயிர் பெற்று இப்பொழுது மீண்டும் வெளிந்துள்ளது.

தமிழறிஞர்களின் தமிழ்த் தொண்டினை எப்போதும் பாராட்டுவதில் முதன்மையானவர் **மாண்புமிகு மக்களின் முதல்வர் புரட்சித் தலைவி அம்மா** அவர்கள் ஆவார். மாண்புமிகு அம்மா அவர்கள் தமிழ் மீதும் தமிழர் மீதும் தமிழ்ப் பண்பாட்டின் மீதும் கொண்டுள்ள அன்பும் கருணையும் அளப்பரியன. தமிழின் மேம்பாட்டுக்கெனப் பல திட்டங்களை மேற்கொண்டு செயலாற்றி வருகின்றார்கள். ஒல்லும்வகையெல்லாம் தமிழ் வளர்த்துவரும் **மாண்புமிகு மக்களின் முதல்வர் புரட்சித் தலைவி அம்மா** அவர்களுக்கு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் நன்றிகளைப் பதிவு செய்கின்றோம்.

தமிழ் மொழி வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்துவரும் **பள்ளிக்கல்வி, தமிழ் வளர்ச்சி மற்றும் தமிழ்ப் பண்பாட்டுத் துறை அமைச்சரும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தலைவருமாகிய மாண்புமிகு கே.சி. வீரமணி** அவர்களுக்கு நன்றி.

தமிழ் வளர்ச்சிப் பணிகளில் ஆர்வத்தோடு நாட்டம் செலுத்தித் தமிழ்த் தொண்டாற்றிவரும் **தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அரசுச் செயலாளர் முனைவர் மூ. இராசாராம்** இ.ஆ.ப. அவர்களுக்கும் இதயம் கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் சிறப்பான முறையில் மறு அச்சுப் பெற முனைந்து உழைத்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவன அனைத்துப் பணியாளர்களுக்கும் அச்சகத்தார்க்கும் என் நன்றி.

**இயக்குநர்**

உ

கடவுள்துணை.

சிவப்பிரகாசசுவாமிகள்

அருளிச்செய்த

# நன்னெறிப்

பதவுரை.



மூன்றாம் பதிப்பு.

இஃது

சென்னபட்டணம்:

வை. புஷ்பரதசெட்டியாரால்

தமது

கலாரத்நாகரம்

என்னும்

அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

1871.

உ

கடவுட்டுணை.

# சிவப்பிரகாசதேசிகர்

## சரித்திரம்.



சிவப்பிரகாசதேசிகர் சாலிவாகன சகாப்தம் ஐந்நூ ற்றுச்சில்லறையில் காஞ்சீமாநகரில் வசித்திருந்த சங் கமவமிசத்தாராகிய குமாரசுவாமிபண்டாரம் என்ப வரின் மூன்றுபுத்திரர்களில் முதல்வராகவிருந்தனர். இவர்கல்விபயின்றுவந்த இளமைப்பருவத்திலேயே த ந்தையை யிழந்தபடியால் தாய்தம்பிமார்களுடன் தி ருவண்ணுமலை ஸ்தலத்தைச்சேர்ந் தங்கு வசித்திருந்த னர். சிலநாட்சென்றபின இலக்கண இலக்கியங்களில் மிகத்தோச்சியடையும் விருப்போடு திருநெல்வேலிக் குச் செல்லுகையில் மார்க்கத்தில் எதிர்ப்பட்ட திரும ங்கலகிராமாதிபதியாகிய அண்ணுமலைரெட்டியார் என் பவரின் வேண்டுகோளின்படி அவரால் அவ்விடத்தில் கட்டுவிக்கப்பட்ட மடத்தில் இரண்டுவருஷகாலங் க ழித்தனர். பின்பு அவர்கொடுத்த ௱00 - பொன்னைப் ப்பெற்றுக்கொண்டு அவ்விடம்விட்டுத் திருநெல்வேலி சேர்ந்து தாம்ரவர்ணி தீரத்திலுள்ள சிந்துபூந்துறை என்னும் சைவமடத்தலைவராகிய வெள்ளியம்பல தம் பிரான் கல்வி கேள்விகளால் மிகச்சிறந்தவரென வறி ந்து, அவரை அணுகித் தமக்கு இலக்கணவிலக்கியங்கள் போதிக்கும்படி வேண்டத், தம்பிரான் இவரடைந்துள் ள கல்வியளவை அறியும் விருப்போடு “கு” என்னும்

எழுத்து ஆதியந்தமாயும் "ஊருடையான்" என்னுஞ் சொல் மத்தியில் அமைந்திருப்பதாயும் ஒருகவி சொல் லும்படிச்சொல்ல உடனே தேசிகர் இக்கவிதைபாடி ய ருளினர்.

## நேரிசை வெண்பா.

குடக்கோடு வானெயிறு கொண்டார்க்குக் கேழன்
முடக்கோடு முன்ன மணிவார்க்கு - வடக்கோடு
தேருடையான் றெவ்வுக்குத் தில்லைதோன் மேற்கொள்
ளூருடையா னென்னு முலகு. [ள

இதைத் தம்பிரான்கேட்டு மகிழ்ந்து தேசிகரைத்தழு விச் சிறந்த ஆசனத்திருத்தித் தாம் அடைந்திருக்கிற கல்வியினுந் திறமுள்ளவரொன்றெண்ணிச் சொல்லவே ண்டியது என்னவிருக்கிறதெனச் சொல்லித் தம்பிரா ன் தேசிகர் தம்பியர்கட்குக் கல்விபோதிப்பதாயொப் புக்கொண்டனர்.

இப்படித் தம்பியர்கள் கல்விபயின்றபின் தாம் ரெட் டியாரிடம் பெற்ற ௩00 - பொன்னையும் அவர்கள்குரு தட்சணையாகக் கொடுக்க முயலுகையில் தம்பிரான் பொன்களை ஏற்றுக்கொள்ளாமல் திருச்செந்தூரில் வ சிப்பவரும் தம்மை அலக்ஷியஞ்செய்து நடப்பவருமா கிய ஓர் புலவரிடஞ்சென்று அவரைக் கல்விகேள்விக ளால் வென்றுவந்தால் அதுவே போதுமான குருதக்ஷ ணை என, இதைக்கேட்டு மிகக்களிப்புடன் சென்று திரு ச்செந்தூரையடைந்து கோயிலில் வாசஞ்செய்திருந்த அப்புலவரை தேசிகர்கண்டு தாம் வந்தகாரணத்தைத் தெரிவித்து வாதுக்கழைத்தனர். அப்போது இருவர்க் கும் ஏற்பட்ட நிபந்தனைப்படி குறித்த காலத்தில் நிரோ

ஷ்டகயமகவந்தாதியாக - ௯0 - பாக்கள்செய்யச் சக்தியற்றவராய்ப் புலவர்நிற்கத் தாம் அவ்வந்தாதியை முடித்து அப்புலவரைத் தமக்குமுறியாக்கிக்கொண்டு திருச்செந்தூரைவிட்டு நீங்கிச் சிந்துபூந்துறையடைந்து தம்பிரானிடத்தில் முறியை ஒப்புவித்து விடைபெற்றுத் திருமங்கலத்திலுள்ள தமது மடம்போய்ச் சேர்ந்தார். அவ்விடத்தில் வாழுங்கால் இவரது கல்விச்சிறப்பானது பலபக்கங்களிலும் பரவிப் பலரையும் இவர்மடத்தை அடைவித்தது.

இப்படியாகக்கழிந்துவரும் இவருடைய வாழ்நாட்களின் பிற்பாகம் வேதாந்த விசாரணையிலும் அதைக் காருண்ணியத்தால் பல நூல்ரூபகமாய்ச் சனங்களுக்குத் திரட்டிக்கொடுப்பதிலும் சென்றது. இச்சனோபகாரஞ் செய்துவருகிற நாட்களில் தமது ஞானாசாரியராகிய பொம்மையபாளையத்தில் எழுந்தருளியிருந்த சிவஞானபாலையசுவாமிகளைத் தரிசித்து அவர்கள்பேரில் பிள்ளைத்தமிழ் முதலிய அநேக பிரபந்தங்களியற்றி யரங்கேற்றி யந்தப்பொம்மையபாளையத்திற்கடுத்த நல்லாத்தூரில் - ௩௨ - வது வயதில் சிவசாயுச்சியம் அடைந்தனர்.

இவர் துறவறமேமிகச் சிறப்புடையதென்கிற கொள்கையுடையவர். ஒருநாள் அண்ணாமலைரெட்டியார் இவரை மணம்புரிந்து இல்லறம் நடாத்தும்படிக்குவேண்ட அதற்குப் பெண்ணைப்புணர்வதினும் பேயைப்புணர்வேனெனக் கடிந்துசொல்லினர்

சிவப்பிரகாசதேசிகர் நூல்கள்செய்வதில் மிகத்திறமுடையவர். இதனடியில்குறித்த இலக்கணமமைந்த

நூற்கள்பலவும் இவரே செய்தனவென்று சொல்லப்படுகின்றன. அவைகள்வருமாறு:—

க. பிரபுலிங்கலீலை, உ. திருக்கூவப்புராணம், ௩. சித்தாந்தசிகாமணி, ௪. வேதாந்தசூடாமணி, ரு. சிவப்பிரகாசவிகாசம், ௬. சிவநாமமகிமை, எ. தர்க்கபரிபாஷை, அ. சோணசைலமாலை, ௯. வெங்கைக்கலம்பகம், க0. வெங்கைக்கோவை, கக. வெங்கையுலா, கஉ. வெங்கைஅலங்காரம், க௩. திருச்செந்திலந்தாதி, க௪. சதமணிமாலை, கரு. நால்வர்நான்மணிமாலை, க௬. நிரஞ்சனமாலை, கஎ. கைத்தலமாலை, கஅ. அபிஷேகமாலை, க௯. இஷ்டலிங்கப் பெருங்கழிநெடில் விருத்தம், உ0. இஷ்டலிங்கக்குறுங்கழிநெடில் விருத்தம், உக. நன்னெறி, உஉ. பெரியநாயகி விருத்தம், உ௩. பெரியநாயகி கட்டளைக்கலித்துறை, உ௪. பிக்ஷாடனநவமணிமாலை.

மேலும் சிவப்பிரகாசதேசிகர் தெற்குத்தேயத்தில் சைவசமயாசாரியர்களாகிய மூவர் பாடல்பெற்ற ஒரு திவ்வியஸ்தலத்தின்பேரில் தோத்திரப்பாக்களும் செய்தருளினர்.

சிவப்பிரகாசதேசிகர் தமக்குமுன் ஐக்கியமான முதற் சகோதரராகிய கருணைப்பிரகாசதேசிகரால் ஸ்ரீகாளத்திபுராணம் ஆரம்பிக்கப்பட்டுப் பினபு தம்மாலும் அது பூர்த்தியாகாமல் தமது இரண்டாவது சகோதராகிய வேலப்பதேசிகரால் நிறைவேறிற்றென்றும் இந்த வேலப்பதேசிகர் பேரூர்ப்புராணமுதலிய சிலநூல்கள் செய்தனவென்றுஞ் சொல்லுகிறார்கள்.

இவர் சரித்திரம் இருக்கிறபடி எழுதப்புகின் விரியுமாகையால் அது தனியாய்ப் பின்னாலே பிரசுரஞ்செய்யப்படும்.

௨

கடவுள் துணை.

# நன்னெறிப்

## பதவுரை.



மின்னெறி சடாமுடி விநாயக னடிதொழ
நன்னெறி வெண்பா நாற்பதும் வருமே.

| பதம். | பொருள் |
|---|---|
| மின் எறி | மின்னலை வீசுகின்ற |
| சடாமுடி | சடைமுடியையுடைய |
| விநாயகன் | விநாயக மூர்த்தியின் |
| அடி தொழ | பாதங்களை வணங்க [வுள்ள |
| நன்னெறி | நன்னெறியென்னும் இந்நூலி |
| வெண்பா நாற்பதும்- | நாற்பது வெண்பாவும் |
| வரும் | வரும். |
| ஏ | அசை. |

(கருத்துரை.) விநாயகரடியைவணங்க நன்னெறி என்னும் இந்நூல் இனிதுமுடியும்.

என்றுமுகமன் இயம்பா தவர்கண்ணும்
சென்று பொருள்கொடுப்பர் தீதற்றோர்-துன்று
சுவை,பூவிற் பொலி குழலாய் பூங்கைபுகழ்வோ
நாவிற் குதவு நயந்து.

| பதம். | பொருள். |
| --- | --- |
| பூவில் பொலி | பூவினால் பிரகாசிக்கின்ற |
| குழலாய் | கூந்தலையுடையவளே |
| பூங்கை | அழகிய கையானது |
| புகழ்வோர் | (தன்னைப்) புகழ்வோர |
| துன்று சுவை | (மதுரம்) பொருந்திய வுணவை |
| நாவிற்கு நயந்து | நாவினுக்கு விரும்பி |
| உதவும் | கொடுக்கும் |
| (அதுபோல) | |
| என்றும் | எப்போதும் |
| முகமன் | உபசார மொழிகளை |
| இயம்பாதவர்கண்ணும் | சொல்லாதவரிடத்திலும் |
| தீதற்றோர் | பெரியார் |
| சென்று | போய் |
| பொருள் | (கிடைத்த பொருளை |
| கொடுப்பர் | தருவர். |

எ-ய்—தீதற்றோர்; ப-லை—கொடுப்பர்; செ-ள்—பொருள்.

(க-ரை.) பெரியோர் உபசாரத்தைவிரும்பாமற் பொருள் கொடுப்பர். (க)

மாசற்றநெஞ்சுடையார்வன்சொலினிதேனையவர்
பேசுற்ற வின்சொல் பிறிதென்க – ஈசற்கு
நல்லோ னெறிசிலையோநன்னுதாலொண்கருப்பு
வில்லோன் மலரோ விருப்பு.'

| பதம். | பொருள். |
|---|---|
| நன்னுதால் | நல்ல நெற்றியையுடையவளே |
| ஈசற்கு | பரமசிவனுக்கு |
| நல்லோன் | நற்குணமுள்ளவராகிய சாக்கிய நாயனார் |
| எறி சிலையோ | (அன்போடு) எறிந்தகல்லோ (அல்லது) |
| கருப்புவில்லோன | கருப்பு வில்லையுடைய மன்மதன (அன்பின்றியெறிந்த) |
| ஒண்மலரோ | ஒள்ளிய புட்ப பாணமோ |
| விருப்பு | விருப்பம் |

அவற்றுட் கலவிருப்பும் மலர் வெறுப்பும் ஆனதுபோல

| | |
|---|---|
| மாசு அற்ற | குற்றம் இல்லாத |
| நெஞ்சுடையார் | மனத்தோரது |
| வனசொல் | கடியசொல் |
| இனிது | இனியதாகும் |
| ஏனையவர் | தீயோர் |
| பேசுறற | சொல்லிய |
| இன் சொல் | இனிய சொல் |
| பிறிதெனக | துன்பந் தருமென்றறிக. |

தோ-எ-ய்—நீ; ப-லை—பிறிதென்க.

(க-ரை.) நல்லோர் கடுஞ்சொல் இன்பமும் தீயோர் இன்சொல் துன்பமும் தரும். (உ

தங்கட் குதவிலார்கைத்தாமொன்றுகொள்ளினவ
ர், தங்கட் குரியவராற் றாங்கொள்க-தங்கநெடுங்
குன்றினாற் செய்தனைய கொங்கையா யாவின்பா
கன்றினாற் கொள்ப கறந்து. [ல்

| பதம். | பொருள் |
|---|---|
| தங்கநெடுங்குன்றினால் | நெடிய தங்கமலையால் |
| செய்தனைய | செய்ததையொத்த |
| கொங்கையாய் | கொங்கையை யுடையவளே |
| ஆவின்பால் | பசுவின் பாலை |
| கன்றினால் | அதன் கன்றைக்கொண்டு |
| கறந்துகொள்ப | கறந்துகொள்வார் |
| (அதுபோல) | |
| தங்கட்கு | தங்களுக்கு |
| உதவிலார்கை | கொடாதவர் கையிலிருந்து |
| தாமொன்று | தாமொருபொருளை |
| கொள்ளின் | பெற நினைக்கின் |
| அவர் தங்கட்கு | அவர்க்கு |
| உரியவரால் | நண்பரால் |
| தாம் கொள்க | தாம் பெறக்கடவர். |

எ-ய்—தாம்; ப-லை—கொள்க; தோ-செ-ள்—அவ்வொன்றை.

(க-ரை.) கொடாதவரிடத்தில் ஒருபொருளைப் பெற வேண்டின் அவர் சிநேகராலதனைப் பெறக் கடவர். (௮)

பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி யாக்குபவர் பேறும்-பிறர்க்குதவி
செய்யாக் கருங்கடனீர் சென்று புயன்முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு.

| பதம். | பொருள். |
|---|---|
| பிறர்க்கு உதவி | பிறருக்கு உதவி |
| செய்யா | செய்யாத |
| கருங்கடல் நீர் | கரிய கடலிலுள்ள நீரை |
| புயல் சென்று | மேகம் சென்று |
| முகந்து | மொண்டு |
| பிறர்க்கு | உலகத்தவர்க்கு |
| பெய்யா | பெய்து |
| கொடுக்கும் | தரும் |
| (அதுபோல) | |
| பிறர்க்கு உதவி | பிறருக்குச் சகாயம் |
| செய்யார் | செய்யாரது |
| பெருஞ் செல்வம் | மிகுந்த செல்வமானது |
| வேறு | வேறாயிருக்கினும் |
| பிறர்க்கு உதவி. | அயலார்க்கு உதவி |
| ஆக்குபவர் | செய்பவரது |
| பேறும் | செல்வமாம். |

எ-ய்—செல்வம்; ப-லை—பேறும்.

(க-ரை.) உதவிசெய்கிறவர் செல்வம் அன்னியருடை யதாயினும் தமதேயாகும். (ச)

நீக்க மறுமிருவர் நீங்கிப் புணர்ந்தாலு
நோக்கி னவர்பெருமை நொய்தாகும்-பூக்குழ
நெல்லி னுமிசிறிது நீங்கிப் பழமைபோற் [லாய்
புல்லினுந் திண்மைநிலை போம்.

| பதம். | பொருள். |
|---|---|
| பூ | பூக்களை (முடித்த) |
| குழலாய் | கூந்தலை யுடையவளே |
| நெல்லின் உமி | நெல்லிலிருந்து உமியானது |
| சிறிது நீங்கி | சிறிது விலகி |
| பழமைபோல் | முன்போல |
| புல்லினும் | சேரினும் |
| திண்மைநிலை | (அது முளைத்தற்காதாரமாக விருந்த) வலிமைநிலை |
| போம் | கெடும் |
| (அதுபோல) | |
| நீக்கம் அறும் | பிரிவு அற்ற |
| இருவர் | (சிநேகர்) இருவர் |
| நீங்கி | (பகைத்து) நீங்கி |
| புணர்ந்தாலும் | சேரினும் |
| நோக்கின் | பார்த்தால் |
| அவர் பெருமை | அச்சிநேகரின பெருமை |
| நொய்தாகும் | அற்பத்தன்மையதாகும். |

எ-ய்—பெருமை; ப-லை—நொய்தாகும்.

(க-ரை.) பிரிந்து கூடுஞ் சிநேகம் பழைய ஒருமை யை யுடைத்தாயிராது. (ரு)

காதன் மனையாளுங் காதலனு மாறின்றித்
தீதி லொருகருமஞ் செய்பவே-யோதுகலை
யெண்ணிரண்டு மொன்றுமதி யென்முகத்தாய்
கண்ணிரண்டு மொன்றையே காண்[ நோக்கருன்

| பதம். | பொருள். |
|---|---|
| ஓது | புகழப்பட்ட |
| கலை எண்ணிரண்டும் | பதினாறு கலைகளும் |
| ஒன்றும் | பொருந்திய |
| மதி என் | சந்திர னென்னப்பட்ட |
| முகத்தாய் | முகத்தையுடையவளே |
| கண் இரண்டும் | இரண்டு கண்களும் |
| ஒன்றையே | ஒருபொருளையே |
| நோக்கல் | ஒத்துப் பார்த்தலை |
| காண் | நீ பார் |
| (அதுபோல) | |
| காதல் மனையாளும் | அன்புள்ள மனைவியும் |
| காதலனும் | நாயகனும் |
| மாறு இன்றி | (தம்முள்) மாறுபாடில்லாமல் |
| தீது இல் | தீமை இல்லாத |
| ஒருகருமம் செய்ப | ஒருதொழிலைச் செய்வர். |
| தான-ஏ | அசை. |

எ-ய்—மனையாளும், காதலனும்; ப-லை—செய்ப; செ-ள்—கருமம்.

(க-ரை.) நாயகியும் நாயகனும் மனம் ஒருமித்து ஒரு நற்காரியத்தைச் செய்யவேண்டும். (௬)

கடலே யனையம்யாங் கல்வியா லென்னு
மடலே றனையசெருக் காழ்த்தி-விடலே
முனிக்கரசு கையான் முகந்து முழங்கும்
பனிக்கடலு முண்ணப் படும்.

| பதம். | பொருள். |
|---|---|
| முழங்கும் | ஒலிக்கின்ற |
| பனிக் கடலும் | குளிர்ந்த கடலும் |
| முனிக்கரசு | முனிவர்க்குத் தலைவரான அகத்திய முனிவரது |
| கையால் | கையினால் |
| முகந்து | மொண்டு |
| உண்ணப்படும் | புசிக்கப்படும் |

{அதுபோலப் புலவர்களே ஒரு சிறுவனும் உம்மை ஒரு சிறியசொல்லைக் கொண்டு வெல்லுவான் ஆதலால்}

| பதம். | பொருள். |
|---|---|
| யாம் கல்வியால் | நாம் கல்வி நிறைவால் |
| கடல் அனையம் | கடலை ஒத்தனம் |
| என்னும் | என்கின்ற |
| அடல் | வலிமையையுடைய |
| ஏறு அனைய | ஆண்சிங்கத்தின்கர்வமொத்த |
| செருக்கு | கர்வத்தில் |
| ஆழ்த்திவிடல் | (உங்களை) அமிழ்த்திவிடாதிருங்கள். |
| ஏ-உ-ம் | அசை. |

தோ-எ-ய்—யாரும்; ப-லை—ஆழ்த்திவிடல்.

(க-ரை.) கல்வியிற் சிறந்தவர்கள் என்று யாருங் கர்வங்கொள்ள லாகாது. (எ)

உள்ளங் கவர்ந்தெழுந் தோங்கு சினங்காத்துக்
கொள்ளுங் குணமே குணமென்க-வெள்ளந்
தடுத்த லரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்த லரிதோ விளம்பு.

| பதம். | பொருள். |
|---|---|
| வெள்ளம் | வெள்ளத்தை |
| தடுத்தல் | (கரைகட்டித்) தடைசெய்தல் |
| அரிதோ | அருமையோ |
| தடம் கரை | விசாலமான கரையை |
| பேர்த்து | உடைத்து |
| விடுத்தல் | (அவ்வெள்ளத்தைப்) புறத்தே செலுத்தல் |
| அரிதோ | அருமையோ |
| விளம்பு | (நீ) சொல் |

(தடுத்தல் அருமைபோல)

| | |
|---|---|
| உள்ளம் | மனதை |
| கவர்ந்து | தன்வசமாக்கி |
| எழுந்து ஓங்கு | எழுந்து வளர்கிற |
| சினம் | கோபத்தை |
| காத்துக் கொள்ளும் | அடக்கிக் கொள்கின்ற |
| குணமே | குணத்தையே |
| குணமென்க | நல்லகுணமென்றுசொல்லவேண்டும் |
| தான் | அசை. |

எ-ய்—நீ; ப-லை—என்க.

(க-ரை.) கோபத்தை யடக்கிக்கொள்ளுதலே ஒருவர்க்கு நல்ல குணமாம். (அ)

மெலியோர் வலிய விரவலரை யஞ்சார்
வலியோர் தமைத்தா மருவிற்-பலியேல்
கடவுளவிர் சடைமேற் கட்செவி யஞ்சாதே
படர்சிறையப் புள்ளரசைப் பார்த்து.

| பதம். | பொருள். |
|---|---|
| பலி ஏல் | (அன்பர்) பூசையைக் கொள்கிற |
| கடவுள் | பரமசிவனுடைய |
| அவிர் | விளங்கும் |
| சடைமேல் | சடையிலிருக்கிற |
| கட்செவி | பாம்பானது |
| படர் சிறை | பரந்த சிறகுகளையுடைய |
| அப்புள் அரசை | (தன்முன்வந்த) அக்கருடனை |
| பார்த்து | கண்டு |
| அஞ்சாது | பயப்படாது |
| (அதுபோல) | |
| மெலியோர் | வல்லமை யில்லாதவர் |
| தாம் வலியோர்தமை- | தாம் வலியோரை |
| மருவில் | சேர்ந்தால் |
| வலிய | பலமுள்ள |
| விரவலரை | பகைவர்க்கு |
| அஞ்சார் | பயப்படார். |
| ஏ | அசை. |

எ-ய்—மெலியோர்; ப-லை—அஞ்சார்.

(க-ரை.) வலியவரைச் சேர்ந்தவர்கள் பகைவர்க்கு அஞ்சார். (௯)

தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறைதீர்க் கிற்பார் விழுமியோர்-திங்கள்
கறையிருளை நீக்கக் கருதா துலகின்
நிறையிருளை நீக்குமே னின்று.

| பதம். | பொருள். |
|---|---|
| திங்கள் | சந்திரன் |
| கறை இருளை | தன் களங்கமாகிய இருளை |
| நீக்கக் கருதாது | நீக்க நினையாமல் |
| மேல் நின்று | ஆகாயத்தில் இருந்து |
| உலகில் | உலகத்திலே |
| நிறை இருளை | நிறைந்த இருளை |
| நீக்கும் | நீக்குவான் |
| (அதுபோல) | |
| விழுமியோர் | பெரியோர் |
| தங்குறைதீர்வு | தங்குறைகள் தீர்தலை |
| உள்ளார் | நினையாராகி |
| பிறர்க்கு | பிறர்க்கு |
| உறூம் | வரும் |
| வெங்குறை | தீய குறைகளை |
| தளர்ந்து | மனந்தளர்ந்து |
| தீர்க்கிற்பார் | நீக்குவர். |

எ-ய்—விழுமியோர்; ப-லை—தீர்க்கிற்பார்; செ-ள்—குறை.

(க-ரை.) பெரியோர் தங்குறைகளைப் பாராட்டாமல் பிறர்குறைகளைத் தீர்ப்பர். (௧0)

பொய்ப்புலன்க ளைந்துநோய் புல்லியர்பா லன்றி
யே, மெய்ப்புலவர் தம்பால் விளையாவாந்-துப்பி
ற், சுழற்றுங்கொல் கற்றூணைச் சூறுவளிபோய்ச்
சுழற்றுஞ் சிறுபுன் றுரும்பு.

| பதம். | பொருள். |
|---|---|
| சூறுவளிபோய் | சுழற்காற்றானது சென்று |
| துப்பின் | தனது வலிமையினால் |
| கற்றூணை | கற்கம்பத்தை |
| சுழற்றுங்கொல் | சுழற்றுமோ |
| சிறுபுன் துரும்பு | அற்பமான சிறிய துரும்பை |
| சுழற்றும் | எடுத்துச் சுழற்றும் |
| (அதுபோல) | |
| பொய் | பொய்யாகிய |
| புலன்கள் ஐந்தும் | ஐம்புலன்களும் |
| புல்லியர்பால் | மூடரிடத்திலேயே |
| அன்றி | அல்லாமல் |
| மெய்ப் புலவர்தம்பால் | மெய்யறிவோரிடத்து |
| நோய் | துன்பத்தை |
| விளையாவாம் | செய்யாவாம் |
| ஏ-ஆம் | அசை. |

எ-ய்—புலன்கள்; ப-லை—விளையா; செ-ள்—நோய்.

(க-ரை.) ஐம்புலன்களால் மூடரேயன்றிப் பெரியோர் துன்பம் உறார். (௧௧)

**வருந்து முயிரொன்பான் வாயி லுடம்பிற்**
**பொருந்துத லேனே புதுமை-திருந்திழாய்**
**சீதநீர் பொள்ளற் சிறுகுடத்து நில்லாது**
**வீதலோ நிற்றல் வியப்பு.**

| பதம். | பொருள். |
|---|---|
| திருந்து | திருத்தமாகிய |
| இழாய் | ஆபரணத்தை யுடையவளே |
| சீதம் | குளிர்ந்த |
| நீர் | சலமானது |
| பொள்ளல் | சில்லியையுடைய |
| சிறுகுடத்து | சிறிய குடத்திலே |
| நில்லாது | நில்லாமல் |
| வீதலோ | ஒழுகுதலோ |
| நிற்றல் வியப்பு | நிற்றலே ஆச்சரியமாகும் |
| (அதுபோல) | |
| வருந்தும் | வருந்துகிற |
| உயிர் | உயிரானது |
| ஒன்பான் | ஒன்பது |
| வாயில் | துவாரங்களையுடைய |
| உடம்பில் | சரீரத்தில் |
| பொருந்துதலே | பொருந்தி யிருத்தலே |
| புதுமை | ஆச்சரியமாகும் (நீங்குதல் ஆ |
| தான் | அசை. ச்சரியம் அன்று.) |

எ-ய்—பொருந்துதல்; ப-லை—புதுமை.

(க-ரை.) ஒன்பது துவாரங்களிருக்கும் உடம்பில் உயிர்நிற்றலுக்கு அன்றி நீங்குதலுக்கு ஆச்சரியமடைதல் பேதமை. (கஉ)

பெருக்க மொடுசுருக்கும் பெற்றபொருட் கேற்ப
விருப்ப மொடுகொடுப்பர் மேலோர்-சுரக்கு
மலையளவு நின்றமுலை மாதே மதியின்
கலையளவு நின்ற கதிர்.

| பதம். | பொருள். |
|---|---|
| மலையளவுநின்ற | மலையினளவாக நின்ற |
| சுரக்கும் | பால்சுரக்கின்ற |
| முலை | முலைகளையுடைய |
| மாதே | பெண்ணே |
| மதியின் | சந்திரனது |
| கலை அளவு | வளர்தலும் தேய்தலுமான பங்கின் அளவாக |
| கதிர் நின்ற | கிரணங்கள் நின்றன (அதுபோல) |
| மேலோர் | உயர்ந்தோர் |
| பெருக்கமொடு சுருக்கம்—வளர்தலையுங் குறைதலையும் | |
| பெற்ற | பொருந்திய |
| பொருட்கு ஏற்ப | செல்வத்துக்கு இசைய |
| விருப்பமொடு | ஆசையுடன் |
| கொடுப்பர் | (இரப்போர்க்கு) தருவார். |

எ-ய்—மேலோர்; ப-லை—கொடுப்பர்; செ-ள்—பொருளை.

(க-ரை.) உயர்ந்தோர் தாம் பெற்ற செல்வத்திற்குத் தக்கபடி யாசிப்பவர்களுக்குக் கொடுப்பர் கீழோர் அப்படிச்செய்யார். (கரு)

தொலையாப் பெருஞ்செல்வத் தோற்றத்தோ மெ
தலையா யவர்செருக்குச் சார்ந்தலிலையா [ன்று
லிரைக்கும்வண் டூதுமல ரீர்ங்கோதாய் மேரு
வரைக்கும்வந் தன்று வளைவு.

| பதம். | பொருள். |
|---|---|
| இரைக்கும் | ஒலிக்கின்ற |
| வண்டு | வண்டுகள் |
| ஊதும் | (மகரந்தத்தை) ஊதுகின்ற |
| மலர் | மலர்களால் ஆகிய [ளே |
| ஈர்ங்கோதாய் | குளிர்ந்த மாலையையுடையவ |
| மேருவரைக்கும் | மேருமலைக்கும் (ஒருகாலத்து) |
| வளைவு வந்தன்று | வளைவு வந்தது. |

[அதுபோலத் தங்கட்கும் வரும் என்று அஞ்சி]

| | |
|---|---|
| தலையாயவர் | (அறிவில்)முதன்மையாகியவர் |
| தொலையா | அழியாத |
| பெருஞ்செல்வம் | பெரியசெல்வத்திலே |

தோற்றத்தோமென்று-பிறந்திருக்கின்றோமென்று

| | |
|---|---|
| செருக்கு | இறுமாப்பு |
| சார்தல் இலை | அடைதல் இல்லை. |
| ஆல் | அசை. |

எ-ய்.—சார்தல்; ப-லை—இலை.

(க-ரை.) பெரியோர் செல்வத்தினால் அகங்காரங் கொள்ளார். (கச)

இல்லானுக் கன்பிங் கிடம்பொருளேவன்மற்
றெல்லா மிருந்துமவற்கென்செய்யும்-நல்லாய்
மொழியிலார்க் கேது முதுநூ றெரியும்
விழியிலார்க் கேது விளக்கு.

| பதம். | பொருள். |
|---|---|
| நல்லாய் | நற்குணமுடையவளே |
| மொழியிலார்க்கு | பேசலில்லாத ஊமைகட்கு |
| முதுநூல் | பழமையான சாத்திரம் |
| ஏது | என்னபயனைச்செய்யும் |
| தெரியும் | பார்க்கும் |
| விழியிலார்க்கு | கண்ணில்லாதகுருடர்க்கு |
| விளக்கு ஏது | விளக்கு என்னபயனைச் செய் [யும் |
| (அவைபோல) | |
| இங்கு | இவ்வுலகத்தில் |
| அன்பில்லானுக்கு | அன்பில்லாதவனுக்கு |
| இடம்பொருள் ஏவல்- | இடம் பொருள் ஏவலுமாகிய |
| எல்லாம் இருந்தும் | இவையெல்லாம் இருந்தும் |
| அவனுக்கு என்செய்யும் - | அவனுக்கு என்ன பயனைச் [செய்யும் |
| மற்று | அசை. |

எ-ய்—அவை; ப-லை—என்செய்யும்.

(க-ரை.) அன்பில்லாதவன் இடம்பொருள் ஏவல்களு டையவ னாயினும் அவற்றால் தருமத்தையும் புகழையும் அடையமாட்டான். (கரு)

தம்மையுந் தங்க டலைமையும் பார்த்துயர்ந்தோர்
தம்மை மதியார் தமையடைந்தோர்-தம்மி
னிழியினுஞ் செல்வ ரிடர்தீர்ப்ப ரல்கு
கழியினுஞ்செல் லாதோ கடல்.

| பதம். | பொருள். |
|---|---|
| கடல் | பெரிய கடலானது |
| அல்கு கழியினும் | சிறிய உப்பங்கழியிலும் |
| செல்லாதோ | போய்ப்பாயாதோ (பாயும்) |
| (அதுபோல) | |
| உயர்ந்தோர் | (அறிவு) ஒழுக்கங்களில் உயர்ந் [தவர் |
| தம்மையும் | தங்களையும் |
| தங்கள் | தமது |
| தலைமையும் பார்த்து | முன்னோ ரிருப்பையுங்கண்டு |
| தம்மை | தம்பெருமையை |
| மதியார் | எண்ணாராகி |
| தமைஅடைந்தோர் | தம்மை அடைந்தவர்கள் |
| தம்மின் | தம்மிலும் |
| இழியினும் | இழிந்தவராயினும் |
| செல்வர் | அவரிடத்துப்போய் |
| இடர் தீர்ப்பர் | அவர்துன்பத்தை நீக்குவர். |

எ-ய்—உயர்ந்தோர்; ப-லை—தீர்ப்பர்; செ-ள்—இடர்.

(க-ரை.) உயர்ந்தோர் தம்மிலுந் தாழ்ந்தோரிடஞ்சென்று அவர்துன்பத்தை நீக்குவர், கீழோ ரவ்வாறு செய்யார். (கசு)

எந்தைநல் கூர்ந்தா னிரப்பார்க்கீந் தென்றவன்
மைந்தர்தம் மீகை மறுப்பரோ-பைந்தொடீ
நின்று பயனுதவி நில்லா வரம்பையின்கீழ்க்
கன்று முதவுங் கனி.

| பதம். | பொருள். |
|---|---|
| பைந்தொடீ | பசும் பொன்னாற்செய்த வளையல்களை யுடையவளே |
| நின்று | (பலன்தருமுன் அழிவில்லாமல்) இருந்து |
| பயன் உதவி | பழமாகிய பயனைத்தந்து |
| நில்லா | (பின்) நில்லாத |
| அரம்பையின் | வாழையினது |
| கீழ்க் கன்றும் | கீழிருக்கிற அதன்கன்றும் |
| கனி உதவும் | பழத்தைத்தரும் |
| (அதுபோல) | |
| எந்தை | எங்கள்பிதா |
| இரப்பார்க்கு ஈந்து | யாசகர்க்குக் கொடுத்து |
| நல்கூர்ந்தான் என்று | வறியனானான் என்று |
| அவன் மைந்தர் | அவன் புத்திரரும் |
| தம் ஈகை | தமது கொடையை |
| மறுப்பரோ | நீக்குவரோ (நீக்கார்.) |

எ-ய்—மைந்தர்; ப-லை—மறுப்பரோ; செ-ன்—ஈகை.

(க-ரை.) தந்தை யாசகர்க்குக்கொடுத்துத் தரித்திரனானானென்று அவன் பிள்ளைகள் கொடுத்தலைவிடார். (எ)

இன்சொலா லன்றி யிருநீர் வியனுலகம்
வன்சொலா லென்று மகிழாதே-பொன்செ
யதிர்வளையாய் பொங்கா தழற்கதிராற் றண்ணென்
கதிர்வரவாற் பொங்குங் கடல். [ன்

| பதம். | பொருள். |
|---|---|
| பொன்செய் | பொன்னாற் செய்யப்பட்ட |
| அதிர் | ஒலிக்கின்ற |
| வளையாய் | வளையல்களை யுடையவளே |
| கடல் | சமுத்திரமானது |
| தண்ணென்கதிர் | (சந்திரனது) குளிர்ந்தகதிர் |
| வரவால் பொங்கும் | வருகையினால் பொங்குமே (அல்லாமல்) |
| அழல் கதிரால் | சுடுகின்ற சூரியனால் |
| பொங்காது | பொங்கமாட்டாது |
| (அதுபோல) | |
| இருநீர் | பெரிய கடல்சூழ்ந்த |
| வியன் உலகம் | பெருமையுடைய உலகத்தவர் |
| இன் சொலால் | இனிய சொல்லினால் |
| அன்றி | அல்லாமல் |
| என்றும் | எப்பொழுதும் |
| வன்சொலால் | கடுஞ் சொல்லினால் |
| மகிழாது | மகிழ்ச்சியையடையார். |
| ஏ | அசை. |

எ-ய்—உலகம்; ப-ல—மகிழாது.

(க-ரை.) உலகத்தவர் இன்சொல்லினாலல்லாமல் கடுஞ்சொல்லினால் மகிழார். (௧௮)

நல்லோர் வரவா னகைமுகங்கொண் டின்புறீஇ
யல்லோர் வரவா னழுங்குவார்-வல்லோர்
திருந்துந் தளிர்காட்டித் தென்றல்வரத் தேமா
வருந்துஞ் சுழல்கால் வர.

| பதம். | பொருள். |
|---|---|
| தேமா | தேமா மரமானது |
| தென்றல் வர | தென்றற்காற்று வர |
| தளிர்காட்டி | தளிரைக்காட்டி |
| திருந்தும் | திருத்தமுற்றிருக்கும் |
| சுழல்கால் வர | சுழற்காற்று வர |
| வருந்தும் | வருத்தமுற்றிருக்கும் |
| (அதுபோல) | |
| வல்லோர் | (கல்விகேள்விகளால்) வல்லவர் |
| நல்லோர் | நல்லவர் |
| வரவால் | வருகையினால் |
| நகைமுகங் கொண்டு | முகமலர்ச்சி கொண்டு |
| இன்பு உறீஇ | இன்பம் அடைந்து |
| அல்லோர் | தீயவர் |
| வரவான | வருகையினால் |
| அழுங்குவார் | வருந்துவர். |

எ-ய்—வல்லோர்; ப-லை—அழுங்குவார்.

(க-ரை.) கல்வியில் வல்லவர் நல்லோர் வருதலினால் மகிழ்ச்சியுந் தீயோர் வருதலினால் மனவருத்தமும் அடைவர். (கக)

பெரியவர்தந் நோய்போற் பிறர்நோய்கண் டுள்ள
மெரியி னிழுதாவ ரென்க-தெரியிழாய்
மண்டு பிணியால் வருந்து பிறவுறுப்பைக்
கண்டு கலுழுமே கண்.

| பதம். | பொருள் |
|---|---|
| தெரி | தெரிந்தெடுத்த |
| இழாய் | ஆபரணத்தை யுடையாய் |
| மண்டு | அதிகரித்த |
| பிணியால் | வியாதியினால் |
| வருந்து | வருந்தும் |
| பிற உறுப்பை | பிற அவயவங்களை |
| கண் கண்டு | கண்கள் பார்த்து |
| கலுழும் | அழும் |
| (அதுபோல) | |
| பெரியவர் | பெரியோர் |
| பிறர் நோய் | பிறர்க்குவந்த நோயை |
| கண்டு | பார்த்து |
| தம் நோய் போல் | தமக்குவந்த நோயைப்போலநினைத்து |
| உள்ளம் | மனமானது |
| எரியின் | தீயிற்பட்ட |
| இழுது ஆவர் | நெய்போல் உருகுவர் |
| என்க | என்றறியக்கடவாய். |
| ஏ | அசை. |

தோ-எ.ய்—நீ; ப-லை—என்க.

(க-ரா.) பெரியோர் பிறர்நோயைக்கண்டு வருந்துவர். (உ0)

எழுத்தறியார் கல்விப் பெருக்க மனைத்தும்
எழுத்தறிவார்க் காணி னிலையா-மெழுத்தறிவா
ராயுங் கடவு ளவிர்சடைமுன் கண்டளவில்
வீயுஞ் சுரநீர் மிகை.

| பதம். | பொருள். |
|---|---|
| எழுத்து அறிவார் | இலக்கண நூலை அறிந்தவர் |
| ஆயும் | ஆராய்கின்ற |
| கடவுள் | பரமசிவனது |
| அவிர்சடை | விளங்குகின்ற சடையை |
| முன் கண்டளவில் | தான் முன்கண்ட வள்வில் |
| சுரநீர் | ஆகாச கங்கையின் |
| மிகை | பெருக்கம் |
| வீயும் | அடங்கும் |

(அதுபோல)

| | |
|---|---|
| எழுத்தறியார் | இக்கண நூலறியாரது |
| கல்விப்பெருக்கம் | கல்வியின்மிகுதி |
| அனைத்தும் | முழுதும் |
| எழுத்து அறிவார் | இலக்கண நூல் அறிந்தோரை |
| காணின் | கண்டால் |
| இலையாம் | அழியும். |

எ-ய்—பெருக்கம் ப-லை—இலையாம்.

(க-ரை.) இலக்கணம் அறியார்கல்வி அதையறிந்தவர் முன்மேன்மைப்படாது. (உக)

ஆக்கு மறிவா னலது பிறப்பினுன்
மீக்கொ ளுயர்விழிவு வேண்டற்க-நீக்கு
பவரா ரரவின் பருமணிகண் டென்றுங்
கவரார் கடலின் கடு.

| பதம். | பொருள். |
|---|---|
| அரவின் | (நஞ்சுள்ள) பாம்பினிடத்துள |
| பருமணி | பருத்த மாணிக்கத்தை [த்த |
| கண்டு | பார்த்து |
| நீக்குபவரார் | நீக்குவோர்யார் (ஒருவருமி ல்லை அன்றியும்) |
| கடலின் கடு | கடலில் உண்டான விடத்தை |
| என்றும் கவரார் | எக்காலத்தும் கொள்ளார் |
| (அதுபோல) | |
| ஆக்கும் | நற்குணங்களைச் செய்கிற |
| அறிவான் அல்லது | அறிவினுல் அல்லாமல் |
| பிறப்பினுல் | சன்மத்தினுல் |
| மீக்கொள் | மேலாகக்கொள்ளும் |
| உயர்வு | உயர்வையும் [ம் |
| இழிவு | கீழாகக்கொள்ளும் இழிவையு |
| வேண்டற்க | விரும்பாதிருக்கக்கடவீர். |

தோ-எ-ய்—நீவிர்; ப-லை—வேண்டற்க; செ-ள்—உயர்வு, இழிவு.

(க-ரை.) அறிவினுல் அல்லாமல் பிறப்பினுல் உயர்வு தாழ்வுகளை நினையாதிருக்கவேண்டும்.(உஉ)

பகர்ச்சி மடவார் பயிலநோன் பாற்றல்
திகழ்ச்சி தருநெஞ்சத் திட்பம்-நெகிழ்ச்சி
பெறும்பூரிக் கின்றமுலைப் பேதாய் பலகால்
எறும்பூரக் கற்குழியு மே.

| பதம். | பொருள். |
|---|---|
| பூரிக்கின்ற | பருக்கின்ற |
| முலை | முலைகளையுடைய |
| பேதாய் | பெண்ணே |
| பலகால் | பலதரம் |
| எறும்பு ஊர | எறும்புகள் ஊர |
| கல் | கல்லும் |
| குழியும் | குழிந்துபோம் |
| (அதுபோல) | |
| மடவார் | பெண்டுகளின் |
| பகர்ச்சி | வாயப்பேச்சோடு |
| பயில | பழகிவர |
| நோன்பாற்றல் | தவஞ்செய்தலினால் |
| திகழ்ச்சிதரும் | விளங்குகின்ற |
| நெஞ்சத்திட்பம் | மன உறுதியானது |
| நெகிழ்ச்சி | தளர்ச்சியை |
| பெறும் | அடையும். |
| ஏ | அசை. |

எ-ய்—திட்பம்; ப-லை—பெறும்; செ-ள்—நெகிழ்ச்சி.

(க-ரை.) பெண்டுகளது வாய்ப்பேச்சோடு பழகத் தவசிக்கு மனோதிடங்கெடும். (உ௩)

உண்டு குணமிங் கொருவர்க் கெனினுங்கீழ்
கொண்டு புகல்வதவர் குற்றமே-வண்டுமலர்ச்
சேக்கை விரும்புஞ்செழும் பொழில்வாய் வேம்
காக்கை விரும்புங் கனி. [பன்றே

| பதம். | பொருள். |
|---|---|
| வண்டு | வண்டுகள் |
| மலர்ச்சேக்கை | பூவாகிய படுக்கையை |
| விரும்பும் | இச்சிக்கும் |
| செழும் | செழித்த |
| பொழில்வாய் | சோலையினிடத்தில் |
| காக்கை | காக்கையானது |
| விரும்பும் | இச்சிக்கும் |
| கனி | பழம் |
| வேம்பு அன்றே | வேப்பங்கனியல்லவோ (ஆம்) |
| (அதுபோல) | |
| இங்கொருவர்க்கு | இவ்வுலகில் ஒருவருக்கு |
| குணம் உண்டு எனினும் | நற்குண முளதாயினும் |
| கீழ்கொண்டு | கீழாயினோர் எடுத்து |
| புகல்வது | சொல்வது |
| அவர் குற்றமே | அவரதுகுற்றமே. |

எ-ய்—புகல்வது; ப-லை—குற்றம்.

(க-ரை.) மேலோர் ஒருவரிடத்துள்ள குற்றத்தை விட்டுக் குணத்தையே எடுத்துச் சொல்வர், கீழோரோ அவர குற்றத்தையே பகர்வர்.

கல்லா வறிவிற் கயவர்பாற் கற்றுணர்ந்த
நல்லார் தமதுகன நண்ணாரோ-வில்லார்
கணையிற் பொலியுங் கருங்கண்ணாய் நொய்தாம்
புணையிற்புகுமோண் பொருள்.

| பதம். | பொருள். |
|---|---|
| வில்லார் | வில்லோடுசேர்ந்த |
| கணையில் | அம்புபோல் |
| பொலியும் | விளங்கும் |
| கருங்கண்ணாய் | (புருவத்தோடு கூடிய) கரியகண்களை யுடையவளே |
| புணையில் புகும் | தெப்பத்தில் சேரும் |
| ஓண்பொருள் | கனத்த பொருள் |
| நொய்தாம் | இலேசாகும் |
| (அதுபோல) | |
| கல்லா | கல்லாத |
| அறிவின் | அறிவினையுடைய |
| கயவர்பால் | மூடரிடத்தே (சேரின்) |
| கற்றுணர்ந்த | கற்றறிந்த |
| நல்லார் | பெரியோர் |
| தமது கனம் | தமது பெருமையை |
| நண்ணார் | அடையார். |
| ஏ | ஈற்றசை. |

எ-ய்—நல்லார்; ப-லை—நண்ணார்; செ-ள்—கனம்.

(க-ரை.) கற்றோர் மூடரிடத்தே சேரின் தமது பெருமையை இழப்பர். (உ௫)

**உடலின் சிறுமைகண் டொண்புலவர் கல்விக்**
**கடலின் பெருமை கடவார்-மடவரால் [ன்**
**கண்ணளவாய் நின்றதோ காணுங் கதிரொளிதா**
**விண்ணளவா யிற்றே விளம்பு.**

பதம். பொருள்.

மடவரால் இளமையாகிய பெண்ணே
கதிர் காணும் சூரியகிரணத்துடன் பார்க்கிற
ஒளி கருமணியொளியானது
கண் அளவு ஆய் நின்றதோ { கண்வரையில் அடங்கிநின்றதோ (அல்லாமல்)
விண் அளவு ஆயிற்றே-ஆகாயமுழுது நின்றதோ
விளம்பு நீ சொல்

{ கண்வரையில் அன்றி முழுதும் விரிந்து நிற்பதுபோல சிறிய வுருவத்தோரும் அறிவினால் உயர்ந்துநிற்பர் ஆதலால் }

ஒண்புலவர் உடலின்-ஒள்ளியபுலவரது உடம்பின்
சிறுமைகண்டு சிறுமையைக்கண்டு
கல்விக்கடலின் அவரது கல்வியாகிய கடலின்
பெருமைகடவார் - பெருமையைக் கடககமாட்டார்.
தான் அசை.

தோ-எ-ய்—யாவரும்; ப-லை—கடவார்; செ-ள்—பெருமை.

(க-ரை.) உடம்பின் சிறுமையைக்கண்டு புலவரது கலவியை யளவிடக்கூடாது. (உ௬)

கைம்மா றுகவாமற் கற்றறிந்தோர் மெய்வருந்தி
தம்மா லியலுதவி தாஞ்செய்வர்-அம்மா [த்
முளைக்கு மெயிறு முதிர்சுவைநா விற்கு
விளைக்கும்வலியனதா மென்று.

| பதம். | பொருள். |
|---|---|
| முளைக்கும் | முளைக்கிற |
| எயிறு | பற்களானவை |
| வலியன | வலிய தின்பண்டங்களை |
| தாம் மென்று | தாம் மென்றுகொடுத்து |
| முதிர் சுவை | முதிர்ந்தசுவை (இன்பத்தை) |
| நாவிற்கு | நாவினுக்கு |
| விளைக்கும் | கொடுக்கும் |
| (அதுபோல) | |
| கற்றறிந்தோர் | பெரியோர் |
| கைம்மாறு | பின் வரும்பயனை |
| உகவாமல் | வேண்டாமல் |
| மெய் வருந்தி | சரீரப் பிரயாசப்பட்டு |
| தம்மால் | தம்மால் |
| இயல் உதவி | கூடிய உதவிகளை |
| தாம் செய்வர் | தாங்கள் செய்வர். |
| அம்மா | வியப்பிடைச்சொல். |

எ-ய்—கற்றறிந்தோர்; ப-லை—செய்வர்; செ-ள்—உதவி.

(க-ரை.) பெரியோர் பயனை நினையாமல் பிறர்க்குத் தம்மாலியன்ற உதவி செய்வர். (உஎ)

முனிவினு நல்குவர் மூதறிஞ ருள்ளக்
கனிவினு நல்கார் கயவர் - நனிவிளைவிற்
காயினு மாகுங் கதலிதா னெட்டிபழுத்
தாயினு மாமோ வறை.

| பதம். | பொருள். |
|---|---|
| நனி விளைவின் | மிக வளர்ச்சியுடைய |
| கதலி | வாழையானது |
| காயினும் ஆகும் | (பழத்தின் அன்றிக்)காயினும் பயன்படும் |
| எட்டி | எட்டியானது [ளுலாயினும் |
| பழுத்தாயினும் | (காயினுல் அன்றிப்) பழத்தி |
| ஆமோ | (உபயோக) மாகுமோ |
| அறை | (நீ) சொல். |
| (அவைபோல) | |
| மூதறிஞர் | பேரறிவுடையோர் |
| முனிவினும் | கோபமுற்றபோதும் |
| நல்குவர் | கொடுப்பர் |
| கயவர் | மூடர் |
| உள்ளக் கனிவினும் | மனமகிழ்ந்தவிடத்தும் |
| நல்கார் | கொடார். |
| தான் | அசை. |

எ-ய்-மூதறிஞர், கயவர்; ப-லே—நல்குவர், நல்கார்; செ-ள்—ஒன்றை நோக்கியது.

(க-ரை.) பெரியோர்கோபத்தினுங் கொடுப்பர் மூடர் மகிழ்ச்சியினுங் கொடார். (உஅ)

உடற்கு வருமிடர்நெஞ் சோங்குபரத் துற்றோர்
அடுக்கு மொருகோடி யாக – நடுக்கமுறார்
பண்ணிற் புகலும் பனிமொழியா யஞ்சுமோ
மண்ணிற் புலியைமதி மான்.

| பதம். | பொருள். |
|---|---|
| பண்ணில் | இராகம்போலும் |
| புகலும் | பேசுகின்ற |
| பனி | குளிர்ச்சி பொருந்திய |
| மொழியாய் | சொல்லையுடையவளே |
| மண்ணில் | பூமியிலுள்ள |
| புலியை | புலிகளைப் பார்த்து |
| மதி | சந்திரனிடத்துள்ள |
| மான் | மானானது |
| அஞ்சுமோ | பயப்படுமோ, (பயப்படாது.) |
| (அதுபோல) | |
| ஓங்கு பரத்து | உயர்ந்த பிரமத்திலே |
| நெஞ்சு உற்றோர் | மனம்பொருந்திய ஞானிகள் |
| உடற்கு வரும் | உடலைப்பற்றி வருகிற |
| அடுக்கும் இடர் | அடுக்குகின்ற துன்பங்கள் |
| ஒருகோடி ஆக | ஒருகோடி வர |
| நடுக்கம் உறார் | பயந்து நடுக்கம் அடையார். |

எ-ப்—உற்றோர்; ப-லை—உறார்; செ-ள்—நடுக்கம்.

(க-ரை.) ஞானிகள் இடர்களுக்கு அஞ்சார். (௨௬)

கொள்ளுங் கொடுங்கூற்றங் கொல்வான் குறுகு ன்மு,உள்ளங் கனிந்தறஞ் செய்துய்கவே-வெள் ளம், வருவதற்கு முன்ன ரணைகோலி வையார் பெருகுதற்க ணென்செய்வார் பேசு.

| பதம். | பொருள். |
|---|---|
| வெள்ளம் வருவ தற்குமுன்னர் | வெள்ளம் வருவதற்குமுன் னே |
| அணை கோலி | கரைகட்டி |
| வையார் | வையாதவர்கள் |
| பெருகுதற்கண் | (அது) பெருகிவந்தபோது |
| என் செய்வார் | என்ன செய்வார்கள் |
| பேசு | நீ சொல். |

(ஆதலால்)

| பதம். | பொருள். |
|---|---|
| கொள்ளும் | உயிரைக்கொள்ளும் |
| கொடுங்கூற்றம் | கொடிய யமன் |
| கொல்வான் | கொல்லும்படி |
| குறுகுதன்முன் | வருதற்குமுன்னே |
| உள்ளங் கனிந்து | மனநெகிழ்ந்து |
| அறஞ் செய்து | தருமங்களைச் செய்து |
| உய்க | பிழைக்கக்கடவாய். |
| ஏ | ஈற்றசை. |

தோ-எ-ய்—நீ; ப-லை—உய்க.

(க-ரை.) மரணம் வருதற்குமுன் தருமஞ்செய்யவே ண்டும்.

(௩

பேரறிஞர் தாக்கும் பிறர்துயரந் தாங்கியே
வீரமொடு காக்க விரைகுவார்-நேரிழாய்
மெய்சென்று தாக்கும் வியன்கோ லடிதன்மேற்
கைசென்று தாங்குங் கடிது.

| பதம். | பொருள். |
|---|---|
| நேர் | தகுதியாகிய |
| இழாய் | ஆபரணங்களையுடையவளே |
| மெய் சென்று தாக்கும் | உடம்பிற்போய்ப் படுகின்ற |
| வியன்கோல்அடி | நீண்டகோலின் அடியை |
| கை | கையானது |
| கடிது சென்று | விரைவிற் சென்று |
| தன்மேல் | தன்மேற்படும்படி |
| தாங்கும் | ஏற்றுக்கொள்ளும் |
| (அதுபோல) | |
| பேரறிஞர் | பெரிய அறிவையுடையவர் |
| தாக்கும் | வருத்துகின்ற |
| பிறர்துயரம் | பிறரது துன்பத்தை |
| வீரமொடு | வீரத்தோடு |
| தாங்கி | (தாம்) ஏற்றுக்கொண்டு |
| காக்க | (அவரைக்) காப்பதற்கு |
| விரைகுவார் | சீக்கிரம்போவார் |
| ஏ | அசை. |

எ-ய்—பேரறிஞர்; ப-லை—விரைகுவார்.

(க-ரு.) பெரியோர் பிறர்துன்பத்தை விரைந்து நீக்குவர்.

பன்னும் பனுவற் பயன்றே ரறிவிலார்
மன்னு மறங்கள் வலியிலவே-நன்னுதால்
காழொன் றுயர்திண் கதவு வலியுடைத்தோ
தாழொன் றிலதாயிற் றான்.

| பதம். | பொருள். |
|---|---|
| நல் நுதால் | நல்ல நெற்றியையுடையவளே |
| காழ் | வயிரத்தையும் |
| உயர் திண் | உயர்வையும் வலிமையையும் |
| ஒன்று கதவு | பொருந்திய கதவானது |
| தாழ் ஒன்று | தாள் ஒன்று |
| இலது ஆயின் | இல்லாததாயின் |
| வலி | வலிமையை |
| உடைத்தோ | உடைத்தாமோ (உடைத்தாகாது) |
| | (அதுபோல) |
| பன்னும் | சொல்லுகின்ற |
| பனுவல் பயன் | நூல்களின் பொருளை |
| தேர் அறிவு இலார் | ஆராயும் அறிவு இல்லாதவரது |
| மன்னும் | மிகுந்த |
| அறங்கள் | தருமங்கள் |
| வலியிலவே | உறுதியில்லாதனவேயாம். |
| தான் | அசை. |

எ-ய்—அறங்கள்; ப-லை—இல.

(க-ரை.) விதிவிலக்குகளைப் பகுத்தறியும் அறிவில்லாதவர் செய்யுங்கருமங்கள் பயன்படா. ()

எள்ளா திருப்ப விழிஞர்போற் றற்குரியர்
விள்ளா வறிஞரது வேண்டாரோ-தள்ளாக்
கரைகாப் புளதுநீர் கட்டுகுள மன்றிக்
கரைகாப் புளதோ கடல்.

| பதம். | பொருள். |
|---|---|
| நீர் கட்டுகுளம் | நீரைக் கட்டிவைத்திருக்கு ஞ் சிறுகுளமே |
| தள்ளாக் கரை | தள்ளப்படாத கரையாகிய |
| காப்புளது அன்றி | காவலையுடையது அல்லாமல் |
| கடல் | சமுத்திரமானது |
| காப்பு உளதோ | காவலையுடையதோ (இல்லை) |
| (அவைபோல) | |
| இழிஞர் | கீழோர் |
| எள்ளாதிருப்ப | தம்மைப் பிறர் இகழாதிரு க்கும்படி |
| போற்றற்கு உரியர் | காக்கப்படுதற்கு உரியவராவர் |
| விள்ளா | வேறுபடாத |
| அறிஞர் | அறிவுடைய பெரியோர் |
| அதுவேண்டார் | அதைவிரும்பார் |
| ஏ | ஈற்றசை. |

எ-ய்—அறிஞர், இழிஞர்; ப-லை—வேண்டார், உரியர்; செ-ள்—அது.

(க-ரை.) பிறரிகழாவண்ணங் காக்கப்படுதல் கீழோர்க்கேயன்றிமேலோர்க்குவேண்டுவதில்லை.

அறிவுடையா ரன்றி யதுபெறூர் தம்பாற்
செறிபழியை யஞ்சார் சிறிதும்-பிறைநுதால்
வண்ணஞ்செய் வாள்விழியே யன்றி மறைகுரு
கண்ணஞ்சு மோவிருளைக் கண்டு. [ட்டுக்

| பதம். | பொருள். |
|---|---|
| பிறை | பிறைபோலும் |
| நுதால் | நெற்றியை யுடையவளே |
| இருளைக்கண்டு | இருட்டைக்கண்டு |
| வண்ணஞ் செய் | அழகு செய்கின்ற |
| வாள் | ஒளிபொருந்திய |
| விழியே யன்றி | கண்களேயல்லாமல் |
| மறை | ஒளிமறைந்த |
| குருட்டுக்கண் | குருட்டுக்கண்கள் |
| அஞ்சுமோ | அஞ்சுமோ (அஞ்சா) |

(அவைபோல)

| பதம். | பொருள். |
|---|---|
| அறிவுடையார் அன்றி | அறிவுடையவரோ அல்லாமல் |
| அதுபெறூர் | அவ்வறிவைப்பெறாத மூடர் |
| தம்பால் | தம்மிடத்து |
| செறி பழியை | வரும் பழிக்கு |
| சிறிதும் அஞ்சார் | சிறிதும் பயப்படார். |

எ-ய்—பெறூர்; ப-லை—அஞ்சார்.

க-ை. பழிக்கு விவேகிகள் அஞ்சுவர் மூடர் அஞ்சார். (௩௪)

கற்ற வறிவினரைக் காமுறுவர் மேன்மக்கண்
மற்றையர்தா மென்று மதியாரோ-வெற்றிநெடும்
வேல்வேண்டும் வாள்விழியாய் வேண்டா புளிங்
பால்வேண்டும் வாழைப் பழம். [காடி

| பதம். | பொருள். |
|---|---|
| வெற்றி | வெற்றியுற்ற |
| நெடும் வேல் | நீண்டவேலானது |
| வேண்டும் | விரும்புகிற |
| வாள்விழியாய் | ஒள்ளியகண்களையுடையவளே |
| வாழைப்பழம் | வாழைப்பழத்தை |
| பால்வேண்டும் | மதுரமுள்ள பால் விரும்பும் |
| புளிங்காடி | புளித்தகாடி நீரானது |
| வேண்டா | (அப்பழத்தை) வேண்டாவாம். |
| (அவைபோல) | |
| கற்றஅறிவினரை | கற்றகல்வியறிவுடையாரை |
| மேன்மக்கள் | மேலோர் |
| காமுறுவர் | விரும்புவர் |
| மற்றையர் | மூடர் |
| என்றும் மதியார் | எக்காலத்தும் (அவரை) மதியார். |
| தாம் - ஏ | அசை. |

எ-ய்—மற்றையர், மேன்மக்கள்; ப-லை—மதியார், காமுறுவர்; செ-ன—அறிவினரை.

க-ரை. கற்றவரை மேலோர்அன்றி மூடர் விரும்பார்.

(௩௫)

தக்கார்க்கே யீவர் தகார்க்களிப்பா ரில்லென்று
மிக்கார்க் குதவார் விழுமியோ-ரெக்காலு
நெல்லுக் கிறைப்பதே நீரன்றிக் காட்டுமுளி
புல்லுக் கிறைப்பரோ போய்.

| பதம். | பொருள். |
|---|---|
| எக்காலும் நீர் | எப்பொழுதும் நீலை |
| நெல்லுக்கு | நெல்லுக்கு |
| இறைப்பதே | இறைப்பதே |
| அன்றி | அல்லாமல் |
| காட்டு | காட்டிலிருக்கிற |
| முளி புல்லுக்கு | உலர்ந்த புல்லுக்கு |
| போய் | போய் |
| இறைப்பரோ | இறைப்பார்களோ (இறையார்) |
| | (அதுபோல) |
| தக்கார்க்கே ஈவர் | யோக்கியருக்கே கொடுப்பர் |
| தகார்க்கு | அயோக்கியருக்கு |
| அளிப்பார் | கொடுப்பார் |
| இல்லென்று | இல்லையென்று (அறிந்து) |
| விழுமியோர் | பெரியோர் |
| மிக்கார்க்கு | (தீமையின்) மிகுந்தோர்க்கு |
| உதவார் | கொடார். |

எ - ய்—விழுமியோர்; ப - லை—ஈவர், உதவார். செ-ள்—பொருளை (தொக்கியது.)

க-ரை. பெரியோர்கள் யோக்கியர்களுக்கே யல்லது அயோக்கியர்களுக்குக் கொடார். (௩௯)

பெரியார்முற் றன்னைப் புனைந்துரைத்த பேதை
தரியா துயர்வகன்று தாழும்-தெரியாய்கொல்
பொன்னுயர்வு தீர்த்த புணர்முலையாய்விந்தமலை
தன்னுயர்வு தீர்ந்தன்று தாழ்ந்து.

| பதம். | பொருள். |
|---|---|
| பொன் உயர்வு | திருமகளின் உயர்வை |
| தீர்த்த | (அழகினாலே) நீக்கிய [வளே |
| புணர் முலையாய் | நெருங்கிய முலைகளையுடைய |
| விந்தமலை | விந்தமென்னு மலையானது |
| தாழ்ந்து | (அகத்திய முனிவர்கையாலமுத்தத்) தாழ்தலையுற்று |
| தன்னுயர்வு | தன்பெருமையை |
| தீர்ந்தன்று | இழந்தது |
| தெரியாய்கொல் | (நீஅதை)அறியாயோ |
| (அதுபோல) | |
| பெரியார்முன் | பெரியவர்முன் |
| தன்னை | தன்னை |
| புனைந்துரைத்த - | சிறப்பித்துச்சொல்லிக்கொண்ட |
| பேதை | மூடன் |
| உயர்வு தரியாது | உயர்வைப் பெறுமல் |
| அகன்று | நீங்கி |
| தாழும் | தாழ்ந்துவிடுவான். |

எ-ய்—பேதை; ப-லை—தாழும்.

க-ரை. பெரியோர்முன்தன்னைச் சிறப்பித்துச்சொல்பவன் தாழ்வையடைவான். (௩௭)

நல்லார் செயுங்கேண்மை நாடோறு நன்றாகு
மல்லார்செயுங்கேண்மையாகாதே - நல்லாய்கே
ள், காய்முற்றிற் றின்றீங் கனியாமிளந்தளிர்நாள்
போய்முற்றி னென்னாகிப் போம்.

| பதம். | பொருள். |
|---|---|
| நல்லாய்கேள் | நற்குணமுடையவளே நீகேள் |
| காய்முற்றில் | (நாள்சென்று)காய்முற்றினால் |
| தின் | தின்னற்கு |
| தீங் கனியாம் | மதுரமான கனியாகும் |
| இளந்தளிர் | இளமையான துளிரானது |
| நாள்போய்முற்றின் | நாள்சென்று முற்றினால் |
| என்னாகிப்போம் | யாதாகிப்போகும் |
| (அவைபோல) | |
| நல்லார்செயும் | நல்லோர்செய்கிற |
| கேண்மை | சிநேகம் |
| நாள் தோறும் | தினந்தோறும் |
| நன்றாகும் | நன்றாகிவளரும் |
| அல்லார்செயும் | மூடர்செய்யும் |
| கேண்மை | சிநேகம் |
| ஆகாது | (நாள்சென்றால்நல்ல)தாகாது |
| ஏ | ஈற்றசை. |

எ-ப்—கேண்மை, கேண்மை; ப-லி—நன்றாகும், ஆகாது.

(க-ரை.) நல்லோர் சிநேகம் தினந்தோறும் இனிதாய் வளரும்; மூடர் சிநேகம் அவ்வாறாகாது கெடும். (௩௮)

கற்றறியார் செய்யுங் கடிநட்புந் தாங்கூடி
யுற்றுழியுந் தீமை நிகழ்வுள்ளதே-பொற்றொடீ
சென்று படர்ந்த செழுங்கொடிமென் பூமலர்ந்த
வன்றே மணமுடைய தாம்.

| பதம். | பொருள். |
|---|---|
| பொன் றொடீ | - பொன் வளையல்களையுடையவளே |
| சென்று படர்ந்த | சென்று பரவிய |
| செழுங் கொடி | செழிப்பாகிய கொடியினுடைய |
| மென்பூ | மிருதுவான பூவானது |
| மலர்ந்த அன்றே | - மலர்ந்த அன்றைக்குமாத்திரமே |
| மணமுடையதாம் | வாசனையுடையதாம் |
| [மறுநாள் அம்மணங் கெடுதல்போல] | |
| கற்றறியார் | மூடர் |
| தாம்செய்யும் | ஒருவரோடொருவர் செய்கிற |
| கடி நட்பும் | மிகுதியாகிய சிநேகமும் |
| கூடி உற்றுழியும் | நெடுங்காலம் கூடியிருந்த இடத்தும் |
| தீமை நிகழ்வு | பொல்லாங்கு விளைதல் |
| உள்ளது | உள்ளதாகும். |
| ஏ | ஈற்றசை. |

எ-ய்—நட்பு; ப-லை—உள்ளது; செ-ள்—நிகழ்வு.

(க-ரை.) மூடர் சிநேகம் தொடக்கத்தில் நன்றாயினும் பின்பு தீமையைத்தரும். (௩௯)

பொன்னணியும் வேந்தர் புனையாப்பெருங்கல்வி
மன்னுமறிஞரைத்தாமற்றொவ்வார்-மின்னுமணி
பூணும் பிறவுறுப்புப் பொன்னே யதுபுனையாக்
காணுங்கண் ணொக்குமோ காண்.

| பதம். | பொருள். |
|---|---|
| பொன்னே | இலக்குமிபோன்றவளே |
| மின்னும் அணி | மின்னுகின்ற ஆபரணத்தை |
| பூணும் | அணியும் |
| பிற உறுப்பு | கைகால்முதலிய அவயவங்கள் |
| அது புனையா | அதனை யணியாத |
| காணும் கண் | பார்க்கின்ற கண்களுக்கு |
| ஒக்குமோ | ஒப்பாகுமோ (ஒப்பாகா) |
| (அதுபோல) | |
| பொன் அணியும் | பொன்னாபரணங்களைத்தரித்த |
| வேந்தர் | அரசர்கள் |
| புனையா | அதனையணியாத |
| பெருங்கல்விமன்னும் | மிக்ககல்விப்பொருள்தங்கிய |
| அறிஞரை | அறிவுடையாரை |
| ஒவ்வார் | ஒப்பாகார் |
| தாம் - மற்று | அசை |
| காண் | முன்னிலையசை |

எ-ய்—வேந்தர்; ப-லை—ஒவ்வார்; செ-ள்—அறிஞரை.

(க-ரு.) அரசர்கள் கல்வி யறிவுடையோரை ஒவ்வார். (சO)

முற்றிற்று.

# புத்தக விளம்பரம்.

பாடசாலைகளுக்கு உபயோகமாயுள்ள இதனடியி
லறிக்கும் புத்தகங்கள் சென்னபட்டணம் முத்தியால
பேட்டை தம்புசெட்டியார் வீதியில் காளியம்ம
கோயிலுக்கு அடுத்த ௯௩-வது கதவிலக்கமுள்
வீட்டிலும், ஷை பேட்டை அரமனைக்காரர் வீதியி
௧௦௫-வது கதவிலக்கமுள்ள அச்சுக்கூடத்திலு
ம். புஷ்பரதசெட்டியாரிடத்தில் விலைக்கு அகப்படு

| | அணா. | பை |
|---|---|---|
| ஆத்திசூடி கொன்றைவேந்தன் பதவுரை, நீதிவாக்கியங்கள், கதைகள். | க | [illegible] |
| வெற்றிவேற்கைப் பதவுரை | க | [illegible] |
| வாக்குண்டாம் பதவுரை | ௩ | [illegible] |
| நல்வழிப் பதவுரை | க | [illegible] |
| நன்னெறிப் பதவுரை | க | [illegible] |
| நீதிநெறிவிளக்கப் பதவுரை | ௪ | [illegible] |
| குறள்மூலம் | ௪ | [illegible] |
| நாலடியார்மூலம் | ௫ | |
| இனியாநாற்பது பதவுரை | க | |
| கதாமஞ்சரி | ௪ | |
| கல்விப்பயன் | ,, | |
| மகாலிங்க ஐயர் இலக்கணம் | ௨ | |
| நன்னூல் மூலம் | ௨ | |
| நளவெண்பா மணிவிளக்குப்பதவுரை இங்கிலீஷ் மொழிபெயர்ப்புடன் (முதல்பதிப்பு.) | ௪௨ | |
| ஷை ஷை (இரண்டாம்பதிப்பு.) ரூபா - க | ,, | |
| நான்மணிக்கடிகை பதவுரை | ௬ | |
| பஞ்சதந்திரம் | ௪ | |

